# 59. ஒரு சிறு நாடகம்

அழுக்குச் சட்டையும் வேட்டியுமாக, கையில் மார்க்கெட் பையுடன் உள்ளே நுழைந்த ஆளைப்பார்த்து "வாங்கோ வாங்கோ ரொம்ப நாளாகல்லையே பார்த்து? ஏது இவ்வளவு தூரம்? சொல்லியனுப்பியிருந்தால் நானே வந்திருப்பேனே" என்றார் பிரபல எழுத்தாளர், குழந்தைப் பத்திரிகை ஆசிரியர் எஸ்வி.

"சென்ற இரண்டு தடவைகள் வரேன் என்று சொல்லிவிட்டு வந்த மாதிரி வந்திருப்பீர்கள் என்று தெரியாதா எனக்கு!" என்றேன்.

"அதான் சொன்னேனே-வேலை அதிகம். நடுவில் உடம்பும் சரியாக இல்லாதிருந்தது. என் ஃபிரண்ட் டாக்டர் ஃபீஸ்கூட வாங்காமல் ஆபரேஷன் செய்தார்" என்றார் எஸ்வி.

"உமக்கு நண்பராக இருந்தால் அந்த ஆபத்தும் உண்டுதான்" என்றேன்.

அதைக் காதில் வாங்காதவர் போல் "நான் இப்போது நாடகங்கள் ஏராளமாகப் படித்துக் கொண்டிருக்கிறேன். உலகில் சிறந்த நாடகங்களையெல்லாம் படித்து விடுவது என்று உட்கார்ந்து ஒரு மூச்சாகப் படித்துக் கொண்டிருக்கிறேன். இந்த இருபது நாடகங்கள் தொகுதியில் ஒன்றிரண்டு நாடகங்கள் நன்றாகவே இருக்கின்றன. ஸிட்னி ஜான்ஸன் என்று ஒருவன் ஒரு சிறிய விஷயத்தைப் பிரமாதப்படுத்தி எழுதியிருக்கிறான்; நாடகமாகப் பிரமாதமாக வந்திருக்கிறது. யூஜின் ஒ நீல் என்று ஒரு ஆசிரியன்-அவன் பெயரை நான் கேள்விப்பட்டதேயில்லை. நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களோ? - அவன் ஒரு சாதாரண விஷயத்தை வைத்துக் ரொகண்டு ஒருவனுக்குச் சாவு வருவதை வைத்து அற்புதமாக நாடகம் எழுதியிருக்கிறான். இதுமாதிரியெல்லாம் நாடகங்கள் தமிழில் இல்லவே இல்லையே. என்னவோ நாடகம் எழுதுகிறேன் என்று உங்கள் நண்பர் கூடத்தான் எழுதுகிறார்!" என்று கேலிசெய்தார் நண்பர் எஸ்வி.

"நீயும் என் நண்பன் தானப்பா!" என்றேன் நான். "தவிரவும் இப்பவும் நீதான் ஸிட்னி ஜான்ஸன், யூஜின் ஒ நீல் என்கிற பெயர்



தெரியாத ஆசிரியர் இவர்களைப் படிக்க ஆரம்பித்து விட்டாயே! அவை போன்ற நாடகங்கள் தமிழுக்கும் இனி வந்துவிடுகின்றன"

"காலையில் இந்தப் பக்கம் வந்தேளே என்ன விசேஷம்? உங்க சந்தாவைக்கூடக் கொடுத்தனுப்ப வேண்டும் என்று எண்ணினேன் முடியவில்லை... பட்டு! உள்ளே மாட்டியிருக்கிற ஸில்க் ஜிப்பா பாக்கெட்டிலே பணம் வைத்திருந்தேன்-எத்தனை இருக்கு பாரு"

"ஸில்க் ஜிப்பாவிலேயா?... இதிலே பணமேயில்லையே! பால்காரனுக்கு இருபத்தியொரு ரூபாய் கொடுத்தேளே!" என்று உள்ளிருந்து பெண்குரல் வந்தது.

"ஆமாம் ஆமாம்! மறந்து விட்டேன்! உன்னிடம் நேற்று நாற்பது ரூபாய் தந்தேனே-அதில் எத்தனை மிச்சம் இருக்கு..." என்று மேலும் தன் மனைவியை விசாரித்தார் எஸ்வி.

"நேற்று எங்கே கொடுத்தேள்? முந்தாநாள் ஐம்பது கொடுத்தேள்; அதில் பதினேழு நயா பைசா மிச்சமிருக்கு" என்று பதிலளித்தார் அவர் ஹைதர்மிணி.

"ஸாரி! நாளைக்குத் தந்து விடறேன்" என்றார் எஸ்வி.

"நான் சந்தாவுக்காக வரவில்லை போனவாரம் வந்தபோது மறுநாளே கதை தரேன்னே அது கிடைக்குமோ, அச்சுக்குத் தர வேண்டும் என்று பார்த்தேன்" என்றேன்.

"அதுவா?...பாதி எழுதினேன் அதற்குள் அந்த நாடகக் கம்பெனிக்காரன்..." என்று எஸ்வி ஆரம்பிக்கும்போது நானே கிளம்பிட்டேன்.

"வரட்டுமா நான்-கதை கிடைத்துவிட்டது எனக்கு" என்று அவருக்கும் கற்பனையில் அவர் ஸஹதர்மிணிக்கும் ஒரு கும்பிடு போட்டுவிட்டுக் கிளம்பினேன் நான்.

என் வருத்தம் எனக்கு! இப்படிச் சமயம் தெரிந்து நடக்கக் கூடிய ஸஹதர்மிணி கிடைக்காதது பற்றி வருத்தம் எனக்கு! என் அதிர்ஷ்டம். அதுபற்றி முப்பத்திமூன்று ஆண்டுகளுக்குப் பிறகு வருந்தி என்ன பயன்?

●

இலக்கிய வட்டம்
பெப்ரவரி *1964*